உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.


தொகுதி-௩௰] ஆங்கீரஸ ஹு ஆவணிமீ [பகுதி-௧௰.
Vol. XXX. August-September-1932. No. 10.


உள்ளுறை.




பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1932.

Printed by Srimathu Raja M Dinakara Bahadur Avl , and published by Thiru. Narayana Iyengar, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௰] ஆங்கீரஸஹு ஆவணிமீ [பகுதி-௧௰.
Vol. XXX. August-September-1932. No. 10.

## லூயி பாஸ்டியர்.

### அவரது இளமைப்பருவமும் அவர் செய்த ஓர் ஆராய்ச்சியும்.

[பி. என். அப்புஸ்வாமி ஐயர்.]

இவர் 1822-ம் வருஷத்திலே பிரான்ஸ்தேசத்திலேயுள்ள டோல் என்னும் ஒரு குக்கிராமத்திலே பிறந்தார். இவருடைய குடும்பத்தார் தலைமுறைதலைமுறையாகத் தோலைப் பதனிடுந்தொழிலைக் கைக்கொண்டிருந்தனர். இவருடைய தகப்பனாரும் குடும்பத்தொழிலையே கையாண்டு நடத்திவந்தார். ஆகலால் பாஸ்டியரின் இளமைப்பருவமானது துர்க்கந்தம்வீசும் இத்தொழிலிலேயே கழிந்தது. இவர் சிறுவயதில் வசித்து விளையாடி வாழ்நாள் கழித்துவந்த இடங்களுக்கு அருகிலுங்கூட சாதாரணமான மூக்குகளைப்பெற்ற மனிதர்கள் போகமுடியாது. இவர் சிறுபிராயமாயிருக்கும்பொழுதே இவருடைய தகப்பனார் டோல் என்னும் கிராமத்தை விட்டுவிட்டுச் சற்றுப் பெரிய ஆர்பாய் என்னும் கிராமத்துக்குக் குடும்பத்தோடு குடிவந்துவிட்டார். அங்கும் முன்போலவே தம் குடும்பத்தொழிலையே அவர் நடத்திவந்தார். அவர் பாலியத்தில் பள்ளிக்கூடத்துக்குப் போய்க் கல்வி கற்றுக்கொள்ளவில்லை. ஆயினும், கல்வியிலுள்ள ஆசையால், தம்முடைய முயற்சியாலேயே மிகவும் சிரமப்பட்டு ஏதோ ஒரு சிறிதளவு கல்வியைத் தாமாகவே கற்றுக்கொண்டார். அறியாமையால் உண்டாகும் தீங்குகளையும், அறியாமையை அகற்றவல்ல கல்வியினால் விளையும் நன்மைகளையும் அவர்

நன்கு உணர்ந்திருந்தார். ஆகையால் தாம் கஷ்டப்பட்டதுபோலத் தம் மகனும் கஷ்டப்படக்கூடாது, தாம் எவ்வளவு ஏழையாயிருந்தபோதி லும் தம் மகனுடைய படிப்புக்கு யாதொருகுறையும் இருக்கலாகாது என்று கருதித் தம்முடைய சிரமத்தையும் பணச்செலவையும் சிறிதும் பொருட்படுத்தாமல் நாட்டின் தலைநகராகிய பாரிஸ்நகரத்திலேயுள்ள ஒரு பள்ளிக்கூடத்தைத் தேர்ந்தெடுத்து லூயியை அங்கே படித்துவரும்படி அனுப்பிவைத்தார். பாலியப்பருவப் பழக்கவழக்கங்களையும் அருமைச் சிநேகிதர்களையும் தாய்தந்தையரையும் விட்டுவிட்டு மூன்றூறுமைலுக் கப்பாலுள்ள ஒரு பெரிய நகரத்திலே இருப்பது தனிக்காட்டில் வாழ் வதுபோலவே லூயிக்குத் தோன்றிற்று. குடலைப்பிடுங்கும் கெட்ட நாற்றம் நாறும் ஆர்பாய் என்னும் கிராமத்தின் சிறுதெருவானது அவ ருக்குத் தேவலோகத்தைப்போலவே தோன்றியது. எப்பொழுது அதை மீண்டும் காண்போம் என்று ஏங்கி ஏங்கி நாட்களை எண்ணத் தொடங்கிவிட்டார். வர வர ஒருமணிநேரம் செல்வதுகூட ஒரு நாளாகவே லூயிக்குத் தோன்றிற்று. படிப்பிற் சிறிதுகூடக் கவனம் செல்லவில்லை. வீட்டு ஏக்கம் பிடித்தவர்கள் ஒன்றுக்கும் உதவாதவர் கள் அன்றோ? கடைசியாகப் பாரிஸ்நகரத்தில் இனிமேல் ஒரு க்ஷணம் கூட இருக்கமுடியாது என்று தம் தகப்பனருக்குக் கண்டிப்பாய் எழுதி விட்டார். அவரும் தம் மனோராஜ்யம் வீணானதற்காக மிகவும் மன வருத்தமடைந்தபோதிலும் உடனே பாரிஸ்நகருக்குவந்து லூயியை ஆர்பாய்க்கு அழைத்துக்கொண்டுபோய்விட்டார்.

சிறிதுகாலம் நகரவாச சுகங்கள் அனுபவித்துணர்ந்த லூயி, ஊருக்குத் திரும்பிவந்த கொஞ்சநாட்களுக்கெல்லாம் அங்கே உள்ள குக்கிராம வாழ்க்கையிலுள்ள நிலைமைவேற்றுமைகளை உணர்ந்து, 'நான் மறுபடியும் பாரிஸ்நகருக்குப்போய், ஒழுங்காகப்படிக்கிறேன்' என்று மன்றாடிக்கேட்டுக்கொண்டார். ஆனால் அவர் தகப்பனர் அதற்குச் சிறிதும் இணங்கவில்லை. ஆர்பாயிலுள்ள சிறுபள்ளிக்கூடத்திலேயே லூயி சேர்ந்து நன்குபடித்துவர ஏற்பாடுசெய்தார். அன்றன்று பகலிற் பள்ளிக்கூடத்தில் லூயி படித்தவிஷயங்களையெல்லாம் ஒவ்வொருநாள் இரவிலும் தகப்பனும் மகனுமாகச் சேர்ந்து வீட்டில் படித்துவந்தார்கள். அதனால் இருவரும் பயன் அடைந்தனர். ஒருவன் தான் கற்றுக் கொண்ட விஷயங்களை ஒன்றும் கல்லாத ஒருவனுக்கு விளங்கும்படி

எடுத்துச்சொல்ல முயலும்போது கற்றுக்கொண்டவிஷயமானது மிகவும் தெளிவடையும், மனதிலும் பதிந்துநிற்கும், ஐயங்கள் நீங்கும். ஆதலால் இம்முறையால் லூயி அளவற்ற பயனடைந்தார். இவ்வாறு இரண்டு வருஷம்வரை ஆர்பாயில் படித்துவந்தார். பின்பு அண்மையிலுள்ள பேசன்சான் நகரத்துக்குப்போய் அங்கே இரண்டுவருஷம் படித்து வந்தார். படிப்பில் சுறுசுறுப்புள்ளவர் என்று பெயரும் வாங்கினார்.

பிறகு 1842-ம் வருஷத்திலே தம்முடைய இருபதாம்வயதிலே மீண்டும் மேற்படிப்புக்காகப் பாரிஸ்நகருக்குச் சென்றார். அங்குள்ள கலாசாலையிற்சேர்ந்து படித்துவந்தார். அக்காலத்திலே வீட்டுநினைவு அவருக்குச் சிறிதும் இல்லை; ஆதலால் படிப்பிலே மிகவும் கருத்தாக இருந்தார். இவருடைய ஊக்கத்தையும், விடாமுயற்சியையும் ஒரே மனதாய் உழைக்கும் குணத்தையும் அங்கு யாவரும் புகழ்ந்து கொண்டாடினர். அக்காலத்திலே இவருக்கு இரசாயனசாஸ்திரத்தில் மிகுந்த பற்று இருந்தது. ஆதலால் இவர் அச் சாஸ்திரத்தில் அதிகமாய் ஆராய்ச்சிகள் செய்து அதிகப் பயிற்சி அடைந்திருந்தார். பூதக் கண்ணாடி வாயிலாகப் பற்பல நுண்ணிய ஆராய்ச்சிகளையும் செய்து கொண்டிருந்தார். அங்குள்ள ஸார்பானில் நிகழும் அரிய பிரசங்கங்களுக்கு ஒழுங்காகச் சென்று கேட்டுக் குறித்துத் தம் அறிவைப் பெருக்கிவந்தார். தாம் காணும் விஷயம் எதையும் ஆராய்ந்து அறிய வேண்டுமென்ற பேரவா அவர்மனத்தினிற் குடிகொண்டிருந்தது.

பின்பு, 1849-ம் வருஷத்தில் ஜனவரிமாதம் 15-ம் தேதியிலே இவர் ஸ்ட்ராஸ்பேர்க் சர்வகலாசாலையில் இரசாயன நூலாசிரியராய் அமர்ந்தனர். அங்கே சுமார் ஐந்தாறுவருஷகாலம் வேலை பார்த்து வந்தார். அதன்பின், 1854-ம் வருஷக் கடைசியில் லீல் நகரத்துச் சர்வகலாசாலையில் இரசாயன சாஸ்திர போதகராய் நியமிக்கப்பட்டார். அங்கே வேலைபார்த்துவரும்போது அவர் ஓய்வுநேரங்களிலெல்லாம் இரசாயனசாஸ்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பற்பலவகையான ஆராய்ச்சிகளையே நடத்திவந்தார். இரசாயனசாஸ்திரத்தைத்தவிரப் பிற விஷயங்களில் அவர் சிறிதும் மனம் செலுத்தவில்லை.

பிரான்ஸ் தேசமானது ஜரிகைக்கும் பட்டுக்கும் ஒயினுக்கும் பேர் போனது. லீல் நகரமானது ஒயினுக்குப் பேர்போனது. அதன் அக்கம்பக்கத்திலுள்ள சுற்றுப்புறக்கிராமங்களில் ஒயின் முதலிய பானங்களைத் தயார்செய்யும் தொழிலாளர் மிகப் பலர் இருந்தனர். அவர்கள் தலைமுறை தலைமுறையாகக் கையாண்டுவந்த முறைகளால், திராக்ஷா ரஸம் முதலிய ரஸங்களைப் பலவிதமாகப் பக்குவப்படுத்திப் பலவிதமான ருசியுள்ள ஒயின்களாகவும் பிற பானங்களாகவும் செய்துவந்தனர். இத்தொழிலானது செழிப்பாக நீண்டகாலம் நடந்துவந்தது. சிறிதுகாலமாக, எதிர்பாராதபடி, அவர்களால் விலக்க ஒண்ணாத கஷ்டமொன்று அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது. அதென்னவெனில், அவர்கள் பழங்களின் ரஸங்களைப் பாம்பரையாய்க் கையாண்டுவந்த பழையமுறைகளில் பக்குவப்படுத்திச் சிறிதோ அதிகமோ அவற்றைப் புளிக்கச் செய்து பலவகையான பானங்களாகத் தயார்செய்துவந்தனர். குறிப்பிட்ட முறையொன்றைக் கையாண்டாற் குறிப்பிட்ட ருசியும் குணமுமுள்ள ஒரு பானம் தயாராகும். ஒவ்வொருவகைப் பானத்திற்கும் குறிப்பிட்ட முறையொன்று கையாளப்பட்டுவந்தது. ஆனால், சில காலமாக அவ்வாறின்றி எல்லாம் கோணல்மாணலாகவே முடிந்துகொண்டிருந்தது. எந்த வெந்தப் பானங்கள் தேவையோ அந்தவந்தப் பானங்களை அவற்றுக்கென்று ஏற்பட்டிருந்த பாம்பரைமுறையாற் செய்துகொள்ளமுடியவில்லை. ஒன்றுவேண்டுமென்று எண்ணி அதற்குத் தகுந்த முறையைக் கையாண்டால் வேண்டாத மற்றொன்று கிடைத்தது; அல்லது முழுவதும் பாழாகிவிட்டது. அவர்கள் இதை நிவர்த்திக்க எவ்வளவோ பாடுபட்டும் ஒன்றும் பயன்படவில்லை. இதனால் வருஷந்தோறும் 40 லக்ஷம் பவுன்வரை நஷ்டமாகிக்கொண்டிருந்தது.

லீல்நகர கலாசாலையில் இராசயனசாஸ்திர ஆராய்ச்சி செய்துவந்த பாஸ்டியரின் திறமையைப்பற்றிய விருத்தாந்தம் அவர்கள் காதிலும் பட்டிருந்தது. ஆகவே அவர்களிற் பலர் ஒன்றுகூடிப், பாஸ்டியரிடம்வந்து அந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் தங்களுக்குத் துணைபுரியவேண்டுமென்று மன்றாடினர். ஆனால் பாஸ்டியருக்குத் தாம் செய்துவரும் ஆராய்ச்சிகளை நிறுத்திக்கொண்டு இப் புதியவேலையில் தலையிடச் சிறிதும் மனமில்லை. ஆயினும், வருஷந்தோறும் இத் தொழிலாளர் அடையும் பெரும் பணநஷ்டமானது நாட்டினுடைய செல்வத்

துக்கு உண்டாகின்ற நஷ்டம் என்பதை உணர்ந்து, தேசப்பற்றினாலும் பரோபகாரசிந்தையினாலும் தூண்டப்பட்டு, தம்முடைய சொந்த ஆசையை ஒதுக்கி, இப் பெருமுயற்சியில் தலையிட ஒப்புக்கொண்டார்.

அக்காலத்திலே, ஏன் ஒயின் புளிக்கிறது என்பதைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது. அதற்குச் சிறிதுகாலத்துக்குமுன்பு ஜெர்மனி நாட்டிலே காடி புளித்துப்போவதற்கும் பொங்குவதற்கும் காரணமான "ஈஸ்ட்" என்பதைப்பற்றியும் அது போன்ற வேறு சிற்சில நுண்ணிய தாவரங்களைப்பற்றியும் கொஞ்சம் கொஞ்சம் ஆராய்ச்சி நடந்திருந்தது. அந்தக்காலத்திலே, இயற்கையின் ஜீவசக்தியே உயிர் தோன்றுவதற்குத் தனிக்காரணம், உயிரானது பிற தூண்டுதலின்றியே தானாகவே சுயேச்சையாய்த் தோன்றுகிறது; உயிர் தோன்றுவதற்கு வேறு காரணமொன்றும் கிடையாது, என்ற கொள்கையே உலகில் எல்லாரும் பொதுவாக நம்பியிருந்த கொள்கை. பலவகையான நுண்ணுயிர்கள் பலவகையான நோய்களுக்குக் காரணம் என்பது அக்காலத்தில் தெரியாது. இக்காலத்திலும் கூட நமது நாட்டிலே பலர் இக்கொள்கையை மறுக்கிறார்களல்லவா? ஒருவன் நோயுறுவதற்குக் காரணம் அவன் செய்துள்ள தீமையே என்றும், ஒருவன் செய்த பாவத்துக்கென்று ஏற்பட்ட தண்டனைதான் நோய் என்றும், இதைத் தவிர நோய்க்கு வேறு காரணம் கிடையாதென்றும் அக் காலத்திற் கருதி வந்தனர். ஒட்டுவாரொட்டிநோய்கள் நாடெங்கும் தொத்திப் பரவி ஜனங்களின் உயிர்களைச் சூறையாடிப் பல ஊர்கள் பாழாகும்படி அவ்வளவு கொடுமையாய் ஜனங்களை வதைத்துவந்தகாலத்திலும் 'இதெல்லாம் பாவம் செய்த தேசத்தாரைக் கடவுள் தண்டிக்கும் முறை' யென்று எண்ணிப் பரிகாரமுறைகளைக் கையாளத் தெரியாது மக்கள் பரிதபித்து வந்தனர். ஆயினும், சிற்சிலர் இக் கொள்கைகளையெல்லாம் உண்மையென்று ஒப்புக்கொள்ளவில்லை. இதன் உண்மை தீர ஆராய்ந்தாலன்றி வெளியாகாது என்று எண்ணிப் பலஅறிவாளர்கள் பலவகையாய்ப் பல இடங்களில் இதனை அறிவதற்கான ஆராய்ச்சிகளைக் கவனித்து நடத்தி வந்தார்கள். ஓர் உயிரிலிருந்துதான் மற்றோர் உயிர் தோன்றக்கூடும், உயிரற்ற இடத்திலிருந்து உயிர் புதிதாகத் தானாகஉண்டாகவே முடியாது என்று அவர் கூறினர். அவர்களுள் பாஸ்டியரும் ஒருவர். உயிர் ஒன்றுமே காணப்படாத ஒரு திராவகத்தைத் தனியாய் ஓர் இடத்தில் வைத்

திருந்தாலும் சில நாட்களில் அதில் உயிர்தோன்றிவிடுகிறதே; எப்படி அவ்வுயிர் தோன்றுகிறது? என்று ஒரு கட்சியார் கூறினர். உரிய முறைகளால் ஒரு திராவகத்தை மலடாக்கிக் கருவற்றுப்போகும்படிசெய்து, உலகில் எங்கும் காற்றில் உலவிவரும் நுண்ணுயிர்கள் அதை அணுகாதபடி அத்திராவகத்தை முத்திரையிட்டுப் பாதுகாத்துவந்தால், அதில் உயிர் எக்காலத்திலும் தோன்றவே தோன்றாது என்று பாஸ்டியர் வற்புறுத்தினர். அந்நாளிலே அவர் மலடாக்கிக் காற்றுப்போகாமல் வைத்த ஒரு திராவகமானது இன்றுவரை கெட்டுப்போகாமல், தூயதாகவே இருக்கிறதென்றும், அமெரிக்காவின் தலைநகரில் இருக்கிற ஓர் அற்புதக் காட்சிச்சாலையில் அது வைக்கப்பட்டிருக்கிறதென்றும் கூறுகின்றனர்.

இவ் வாராய்ச்சிவிஷயங்களை மீண்டும் மீண்டும் நன்கு சோதித்துப் பின்னும் புதிது புதிதாக அநேகம் ஆராய்ச்சிகளை நிகழ்த்திப் பற்பல அரிய விஷயங்களை எல்லாம் அவர் தெரிந்துகொண்டார். பிறகு பூதக் கண்ணாடியின் துணையைக்கொண்டு மிகவும் நுண்ணிய "ஈஸ்ட் என்னும் செடி" ஒன்றைத் தனியாகப் பிரித்தெடுத்தார். இச் "செடி" யைப் பூதக்கண்ணாடியின்வழியாகப் பார்க்கக்கூடுமேயொழிய நமது கண்களால் நேரே பார்க்கமுடியாது. அவ்வளவு நுண்மையானது அது. பிறகு, இவ்வாறு பிரித்தெடுத்த 'செடியை' வளர்த்து ஒரு ஜாதி ஈஸ்ட் என்னும் செடிவர்க்கத்தைப் பயிர்செய்தார். இவ்வாறு அவர் பலவிஷயங்களைத் தேடி ஆராய்ந்துவரும்போது பலவகையான நுண்ணிய தாவர வகைகள் இருக்கின்றன வென்பது அவருக்குத் தெரியவந்தது. அவற்றை வெவ்வேறாக வைத்துக்கொண்டு, அவற்றின் உதவியால் ஒயின்களைத் தனித்தனியாகப் புளிக்கச்செய்துபார்த்ததில், ஒவ்வொரு வகைச் செடியும் வெவ்வேறுவகையாய்ப் பரிபாலிக்கப்பட்டு வளர்கிறதென்பதும், வெவ்வேறுவகையான ஒயின்வகையை உண்டுபண்ணுகிறதென்பதும் தெரியவந்தது. பிறகு, இன்ன இன்ன வகைச் செடி இவ்விவ்விதமான ஒயினவகையை உண்டுபண்ணுகிறது என்பதை மீண்டும் மீண்டும் பரிசோதித்து ஐயமறத் தெரிந்துகொண்டார். பின்னர், ஒயின்செய்யும் தொழிலாளரை அழைத்து, எந்தவெந்தச் செடிவகைகள் அவர்களுக்கு உபயோகமுள்ளவை, அச் செடிவகைகளை எப்படிப் பிரித்தெடுப்பது, தேர்ந்தெடுத்துப் பிரித்துவைத்துக்கொண்ட செடியை எப்படி வளர்ப்பது, அப்படி வளர்த்துவரும் செடியை அவருடைய

தொழிலுக்கு உதவிபுரியும்படி உபயோகிப்பது எப்படி, அவர் இயற்ற விரும்பும் குறிப்பிட்ட ஒயின் அல்லது பீர் வகைகளை உண்டாக்கும் பொருட்டு இச் செடிவகைகளைத் தூண்டும் முறைகள் யாவை என்னும் விஷயங்களைப்பற்றி அவர்களுக்கு விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறினார். பாஸ்டியர் கற்றுக்கொடுத்த முறைகளை அத்தொழிலாளர்கள் கையாளத் தொடங்கினர். அன்றுமுதல் முன்போல அவர்களுடைய தொழிலும் ஒழுங்காக நடந்து விருத்திபடைந்துவந்தது.

பாஸ்டியர் செய்த இவ் வரியவேலையைக் கேவலம் கள்ளுக்கும் கட்குடியர்களுக்கும் அவர் செய்த உபகாரமாக எண்ணவே கூடாது. அவர் செய்த ஆராய்ச்சியினால் தீயார் என நாம் கருதும் சிலர் பயன் அடைந்தார்கள் என்பது உண்மையே. ஆனால் பாஸ்டியர் செய்த இவ் வாராய்ச்சி அவ்வளவோடு நின்றுவிடவில்லை. இவ்வாராய்ச்சிகளின் பயனாக உலகத்துக்கு ஏற்பட்ட நன்மையின் அளவும் தன்மையும் மிகவும் போற்றத்தக்கனவாகவிருந்துவருகின்றன.

கண்ணுக்குத்தெரியாத மிகமிக நுண்ணிய ஜீவஜந்துக்களையும் தாவரங்களையும் கண்டுபிடித்து, அவற்றின் ஜாதி குண பேதங்களைக் கொண்டு அவைகளைப் பிரித்துப் பல வகுப்புக்களாக வகுத்து, அவ் வகுப்புக்களிலுள்ளவற்றினின்று ஒரு தனிச் செடிவகையையோ உயிர்ப் பிராணிவகையையோ தனியாகப் பிரித்தெடுத்து, அத்தகைய நுண்பொருளைப் பலவகையாய்க் கூர்ந்து ஆராய்ந்து, அதன் பிறப்பு, வளர்ப்பு, மரண ரகசியங்களையும் அதன் குணுதிசயங்களையும் தெரிந்து, அது இன்ன இன்னவாறு நடந்துவருகிறது, மனிதனுக்கு இன்னவகையாய்த் தீங்கோ நன்மையோ புரிகிறது என்பவற்றையெல்லாம் ஆராய்ந்து, உண்மைகளைத் தீர அறிந்து அவர் வெளியிட்ட விஷயங்களால் உண்டாகின்ற நன்மையை நினைக்க நினைக்க அவர் செய்த வேலையின் திறமும் பயனும் நமக்கு ஒருவாறு புலனாகும். தயங்கிக் கிடந்த அறிவுவெள்ளத்தைப் புதியவாய் வெட்டிய வாய்க்கால்கள் வழியாக ஓடிப்பாயச் செய்த இப் பெருமுயற்சியானது இப்பொழுது மனிதவர்க்கத்துக்கு மேன்மேலும் நற்பயனை அளித்துவருகிறது.

---

**1932ஷு ஆகஸ்டுமீ 17௳ (ஆங்கீரஸஷு ஆவணிமீ 2௳) காலை 9-மணிக்குக் கூடிய மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் காரியநிர்வாகஸபையில் முடிவுசெய்யப்பெற்ற தீர்மானங்களின் விவரம்.**

---

1. மகா-ா-ா-ஸ்ரீ K. ராமையங்கார் அவர்கள் B.A., B.L.,
அக்கிராஸனம் வகித்தவர்.
2. ,, V. S. ராமஸ்வாமிசாஸ்திரியார் அவர்கள் B.A., B.L.
3. ,, N. R. கிருஷ்ணஸாமி ஐயங்கார் அவர்கள் B.A., B.L.
4. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்கார் அவர்கள் B.A. B.L., M.L.C.

இவர்கள் வந்திருந்தார்கள்.

**தீர்மானங்கள்.**

1. 1931-ஷு டிசம்பர்மீ முதல் 1932-ஷு ஜூலைமீ முடிய உள்ள சங்கம் வரவு செலவு கணக்குகள் அங்கீகரிக்கலாயின.

II. சங்கத்தின் 1931–1932 வருஷாந்தக்கணக்குகளைப் பரிசோதனை செய்வதற்கு மதுரை ஹைகோர்ட்டுவக்கீல் மகா-ா-ா-ஸ்ரீ V. சுந்தரமையாவர்களையே மறுபடியும் ஆடிட்டராக நியமிக்கலாயிற்று.

III. சிதம்பரம் அண்ணாமலை ஸருவகலாசாலை செனேட்டுக்கு, சங்கத்தின் பிரதிநிதி ஒருவரை இனி நிகழும் சங்க வருஷோத்ஸவ மஹாசபைக்கூட்டத்தில் தெரிந்தெடுக்கவேண்டுமெனத் தீர்மானிக்கலாயிற்று.

IV. 1932–1933ம் ஷுத்துச் சங்கமாபீச வரவு செலவு மதிப்புத்திட்டம் திருத்தங்கள் செய்தபிரகாரம் அங்கீகரிக்கலாயிற்று.

V. மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினராக வேண்டுமெனக்கோரிய சிலோன், மட்டக்களப்பு உதவி உபாத்தியாயர் மகா-ா-ா-ஸ்ரீ S. நாகையா அவர்களை அங்கத்தினராக அங்கீகரிக்கலாயிற்று.

VI. சங்கத்தின் வருஷோத்ஸவத்தை நடத்துவதற்குச் சௌகரியமான தேதி குறிப்பிடவேணுமென்று மாட்சிமைதங்கிய அக்கிராசனாதிபதியவர்களைக் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரை,
17–8–1932.

K. ராமையங்கார்,
அக்கிராசனம் வகித்தவர்.

---

# சேனாவரையப் பதிப்பும் பிழைதிருத்தமும்.

முந்தைக்காலத்து, இக்காலத்தைப்போன்று எளிதிற் சுவடிநயம் பெறும் நலமின்மையால் அறிஞர்கள் கையா லேட்டில் எழுதியும், மனனம்பண்ணியும் அருமந்த தமிழ்க்கலைகளை வளர்த்தனர். ஆதலின், அக்காலத்தவைகள் பிழைபடலொவ்வுமென்பது துணிபாகும். ஒரே நூலிற் பல பிரதிகளிற் பல்வேறு வேறுபாடுகள் காணுதலின் இக்கூற்று வலியுடைத்தேயாகும்.

எனினும், அவ்வேறுபாடுகள் பிழைபட்டனவெனவும் உண்மையுரையேயெனவு மறிதற்குப் பெரிதுங் கருவிக ளில. அறிஞர்தம் ஆராய்ச்சியாற் றுணியலாமெனினும், அஃதூஉம் அத்துணை யெளிதி லியன்றதன்று.

இக்கூறியாங்கே ஆனைப்பெருமைச் சேனாவரையாற் கண்ட தொல்காப்பியச் சொல்லதிகாரவுரையின்கண்ணும் பல வேறுபாடுகள் காண்கின்றன. அவற்றுட் சில, திரு சி. கணேசையரவர்களால் சென்ற வைகாசித்திங்களில் வெளியான செந்தமிழ்ச் சஞ்சிகை (தொகுதி ௩0-ல் எ-ஆம் பகுதி) யின்கண் மேற்காட்டிய தலையங்கத்துடன் ஆராயப்பெற்றுள்ளன. உண்மை யுணரவேண்டுமென்னுங் கருத்துடன் நண்பர் ஆராய்ந்த அவற்றுட் சிலவற்றை யானும் ஆராயத் துணிகின்றேன்.

அவற்றுள் ஒன்று,

> "உருபென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
> இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை"

என்னும் (கிளவி. ௨௪) சூத்திர வுரையில், 'உருபினு மென்றது உருபெனமொழியினு மென்றதனான், உருபின் பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்டமென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க' என்பதில், 'உருபினும்' என்பதன்கண்ணதாகும்.

2

தொல்காப்பியச் சொல்லதிகாரக்குறிப்பில் ஸ்ரீமத் P. S. சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்கள் (M.A., Ph. D,L.T.), 'உருபினும் என்றால் உருபென்னுஞ் சொல்லெனப் பொருள்படுமா? எனின், சொல் என்பதைக் குறிக்கவேண்டித்தான் சூத்திரத்தில், 'உருபென மொழியினு' மெனத்தொல்காப்பியர் கூறியுள்ளாரெனத் தெரிகிறது. தன்னினமுடித்தலான் வடிவுமுதலிய சொற்களுங் கொள்ளலாமென்று சேனாவரையர் கூறியிருப்பிற் பொருந்தும்' என்று கூறியதைத் தவறெனக் கண்டு மறுத்ததாகும் அஃது.

அம்மறுப்பின் திரண்டகருத்து: 'உருபெனு' மென்பது 'உருபினு' மெனப் பிரதியெழுதுவோர்களால் மயங்கித் தவறாக எழுதப்பெற்றிருக்கு' மென்பது.

இதனைச் சிறிது நோக்குவோம்.

'உருபெனமொழியினும்' என்று தொடங்கும் இச்சூத்திரம், 'பான்மயக் குற்ற ஐயக் கிளவி—தானறி பொருள்வயிற் பன்மை கூறல்' —என்னும் வழுவமைதிச்சூத்திரத்தின்பின்னர் வழுவமைதியைக்குறிக்கவே அமைந்துள்ளது; அச்சூத்திரப்பொருளையே தழுவியது. எனவே, 'உருபு' என்பது ஐயத்தின்கண்ணதாகிய பொதுச்சொல்லாகும்.

சேனாவரையர் 'உருபினும்' என்றிருந்தால் 'உருபு' என்ற ஒரு சொல்லையே ஐயப்பொதுச்சொல்லாகக் கொள்ளவேண்டிவரும் என்ற கருத்தைக்கொண்டே 'உருபென மொழியினும்' என்றமையால் வடிவு, பிழம்பு, பிண்டம் என்ற சொற்களையும் ஐயப்பொதுச்சொற்களாகக் கொள்ளலாம் என்று கருதியிருக்கிறார்.

ஐயாவர்கள் இக்கருத்தைக் கவனியாமலே 'உருபினும்' என்பது பொருள்கருதிவருமென்றும், 'உருபெனமொழியினும்' என்பதும் அப்பொருட்டேயென்றும், ஆகவே, 'உருபினும்' என்பது, 'உருபெனும்' என்றிருந்திருக்கவேண்டுமென்றும் உரைக்கிறார்கள்.

மற்றும், 'உருபினும்' என்றிருந்தால் அஃது, 'மொழியினும்' என்பதனோடு இயைபாமையானும், 'உருபெனும்' என்றே யிருக்க வேண்டு மென்கிறார்கள். முதலில், 'உருபினும்' என்பதும், 'உருபென மொழியினும்' என்பதும் ஒருபொருளனவேயெனக் கூறியவர், பின்னர்

அதனை மறந்து 'உருபினும்' என்பது 'மொழியினும்' என்பதனோடு இயையாதென்று கூறினர்கள். 'உருபினும்' என்றிருந்தால் 'மொழியினும்' என்ற சொல் லெற்றுக்கோ? ஈண்டு உரையாசிரியராய சேனாவரையர் தங்கருத்து, சொற்கள் பொருளுணர்த்தும் ஆற்றலைக் குறிப்பதேயாகும்.

சொற்கும் பொருட்கு முள்ள ஒற்றுமைச்சம்பந்தத்தாற் சில விடங்களிற் பொருளையுஞ் சிலவிடங்களிற் சொல்லையும் உணர்த்துதல் சொற்களின் ஆற்றலாகும். அவற்றைச் சிலவிடங்களிற் குறிப்பாகவுஞ் சிலவிடங்களில் வெளிப்படையாகவும் உணரலாகும். அங்ஙனமே ஈண்டும் உருபெனமொழியினு மென்பது பொருளைக்கருதிக் கூறியதேயாகும். எனவே, சாஸ்திரியாரவர்களின்கருத்துப்படி தன்னினமுடித்தலாலேயே வடிவு, பிழம்பு, பிண்டம் என்பவற்றைக் கொள்ளவேண்டியது மின்று.

மற்றும், ஐயரவர்கள்கருதியவாறு இருக்கவேண்டுமானல், "'உருபெனுமொழியினும்' என்னாது, 'உருபென மொழியினும்' என்றமையால், அவ்வுருபின்பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்ட மென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க" என்று சேனாவரையர் கூறிய தொடர் இருக்கவேண்டும். அங்ஙனங் கொண்டால் திரிபுணர்ச்சியால் திருத்தப் பட்டது எனக் கொள்ளவேண்டிவரும். 'உருபினும்' என்பதும், 'உருபெனுமொழியினும்' என்பதும் சொல்லையே குறிக்குமென்பதும், 'உருபெனமொழியினும்' என்பது பொருளையே கருதுமென்பதும் உய்த்துணர்தலால் அறியலாம். எனவே, 'உருபினும்' என்பது 'உருபெனும்' என்றிருக்கவேண்டுமென்று கருதுதற்கில்லை.

மற்றொன்று, 'பெண்மைசுட்டிய' என்னும் (கிளவி. ௪) சூத்திரத்தின்கண்ணதாகும்.

இச்சூத்திரத்தில், 'தமக்கென வீறுடைய ஆடூஉவறிசொன் முதலியவற்றிற் குரியஈற்றானும் இசைக்குங்கொல்' என்பதில், 'தமக்கென வீறுடைய' என்பதைத் 'தமக்கெனவீறுடையவாய்' எனத் திருத்தி விட்டார்களென அந்தச் சொல்லதிகாரத்தை யிரண்டாமுறைபாகப்பதிப் பித்த திரு. கந்தசாமியாரவர்கள்மேற் குறைகூறப்படுகிறது.

ஐயரவர்கள், 'ஈறுடைய' என்பது வினையாலணையும்பெயராய், 'இசைக்குங்கொல்' என்பதனோடு முடியுமென்றும், ஈறுடைய என்பது

னிறுதியில் ஒரு தொடரிசைக்குறியிடின் எழுவாயாகுமென்றுங் கூறி 'ஈறுடையவாய்' என்பதனால் வாக்கியத்தின் செறிவு கெடுமென்றுங் கருதுகிறார்கள்.

இனி யிச்சூத்திரத்தின் திரண்டபொருளை யாராய்ந்தால், உயர்திணை யிடத்துவரும் பெண்மைத்தன்மை குறித்த ஆண்மைதிரிந்த பெயர்ச் சொல்லுக்கும், தெய்வத்தைக்குறித்த பெயர்ச்சொல்லுக்கும் இவைகளை யுணர்த்துவதற்கு ஏற்ற வேறு ஈற்றெழுத்துக்க ளில்லையென்றும், உயர் திணையிடத்து ஆடூஉவறிசொல், மகடூஉவறிசொல், பல்லோரறிசொல் என்னு மிவற்றிற்குரிய வீற்றெழுத்துக்களையே தமக்குரிய ஈற்றெழுத் துக்களாகக் கொள்ளுமென்றும் விளங்கும்.

இப்பொருளை விளக்குதற் கிரண்டுவாக்கியங்கள் காணப்பெறுகின் றன. ஒன்று, 'இவ்வென வறியு மந்தந் தமக்கிலவே' என்பது. மற் றொன்று, 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' என்பது.

இவ்விரண்டு வாக்கியங்களு மில்லாவிடிற் சூத்திரப்பொரு ளினிது விளங்காது. எங்ஙனமெனின், 'இவ்வென வறியும் அந்தந் தமக்கிலவே' யென்றுவிடின் 'அந்தமாகவரும் எழுத்துக்கள் எவையோ? என்னுந் திரிபுணர்வும், 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' என்றுமட் டிற் கூறிவிடின், 'இவற்றிற்கென வேறு பால்களும் ஈறுகளுமுண்டு' என்னும் எண்ணமும் உண்டாதல் ஒருதலையாகும்.

மற்றுந் திணைபால்களை யுணர்த்துதற்குப் பொதுவான வீறுகளும் ஒவ்வொன்றற்குஞ் சிறப்பான பல வீறுகளும் உளவாதலாலும் மேற் கூறிய இருவாக்கியங்களும் இன்றியமையாதனவே.

ஆகவே, சேனாவரையர் 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' எனவே தமக்கென வேறீறின்மை பெறப்படுதலின், 'இவ்வென வறியு மந்தந் தமக்கிலவே' எனல் வேண்டா வெனின்' என்னுங் கடாவை நிகழ்த்தி, அதற்கு விடையாகத், 'தமக்கென வேறீறுடையவாய் ஆடூஉ வறிசொல் முதலாயினவற்றிற்குரிய ஈற்றானும் இசைக்குங்கொல்லென் னும் ஐயத்தை நீக்குதற்கு 'அந்தந்தமக்கிலவே' எனல் வேண்டுமென் பது' என்னும் வாக்கியத்தையிறுத்தார்.

'தமக்கென ஈறுடைய' என்பது வினையாலணையும்பெயராய்நின்று 'இசைக்குங்கோல்' என்பதனோடு முடியின் ஓரீறுடையசொல் மற்றொன்ற னீற்றால் இசைக்காது என்று பொருள்படும். அது பொருளன்றாதலால், 'வேறீறுடையவாய்' என்றிருத்தல்வேண்டு மென்க. வேறீறுடையவாய் என்றிருந்தால்மட்டில் இச்சூத்திரத்தின்கருத்துப்படி, ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவிக்கும் வேறீறின்மை பெறப்படும்.

ஐயரவர்கள் இக்கருத்தை நோக்காது, பதிப்பாசிரியர் 'ஈறுடைய' என்பது வினையாலணையும்பெயராகப் பொருள்படுமென்பதையறியாமை யாற் றிருத்திவிட்டனரெனக் குறைகூறினார்கள். மற்றும் 'தமக்கென வேறீறுடையவாய்' என்பதை முற்று மெடுத்துக்கொள்ளாமல், 'தமக் கென வீறுடையவாய்' என்பதைமட்டும் ஆராய்ச்சித் தொடராகக் கொண்டனர். 'வேறீறுடையவாய்' என்பதனால் 'உயர்திணைமருங்கிற் பால்பிரிந்திசைத்தலுடன் தமக்கென வேறீறும் உடையவோ' என்னும் ஐயநிகழ்தல் இயல்பாதலையும், 'தமக்கென வீறுடைய' என்பதனால், 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' ஈறுளதனையே ஒவ்வுமோ ஒவ்வாதோ என்னும் மாறுபட்ட நோக்கமுண்டாதலையும் நோக்குக.

இதுகாறும், என்னால் இயன்றவரை ஆராயப்பட்ட இத்தொடர்க ளுக்கு உண்மைப்பொருள்காணுதல் நோக்கமேயன்றித் திரு. கணேசைய ரவர்களைக் கண்டிக்கும் நோக்கம் இன்று. ஆதலின் அறிஞர்கள் உண்மை யுணர்தலைத் தலைக்கொள்வார்களென் றெண்ணுகிறேன்.

இங்ஙனம்,
ஜ. இராஜு முதலியார்,
தமிழாசிரியர்,
பூவிருந்தவல்லி.

---

## ஒரு திருத்தம்.

செந்தமிழ்த் தொகுதி ௩0. பக்கம் ௬௪ வரி ௨௪ல். 'திருக்குற ளாசிரியருக்கு' என்றதைத் 'திருக்குறளுரையாசிரியருக்கு' எனத் திருத்திப்படிக்க.

இங்ஙனம்,
கு. சு. நவநீதகிருஷ்ண பாரதி.

# மகிழுரை.

பொன்னி வளந்தரு புனனு டதனுள்
உன்னும் உத்தம தான புரத்தினன்;
மக்கட் குரிய மாண்குண மனைத்தும்
மிக்குநன் வேதியன்; விழுத்தமிழ்க் கலையில்
தக்க தேர்ச்சியின் தன்னிக ரிலனென
மிக்க சீர்த்தி மேவுறு மேன்மையன்;
கனிதமிழ்க் கல்வி கற்பவர்க் களித்து
நனிமீக் கூறு நறுமலர் சூடினேன்;
மன்னு தீந்தமிழ் வளர்ப்பா ரின்றித்
தன்னெழில் குன்றித் தளர்வுறு காலை,
இலக்கிய இலக்கணச் சுவடிகள், தேடுழித்
தலத்துறு தடைகட்குத் தான்சலி யாது,
மடுத்தவா பெல்லாம் வலமுறு பகடன
இடுக்கண் எவையும் இடர்பட வென்று
நுணுகியா ராய்ந்து நூல்களச் சியற்றிப்
புணரிசூழ் புவிக்குப் புரிந்த உதவியன்;
பேணுதா க்ஷிணாத்ய கலாநிதிப் பெற்றியும்
மாணுறு மகாமகோ பாத்யாய பட்டமும்
இருபெரும் வரிசைமுன் எய்திடப் பெற்றோன்;
பொருவற நன்சொற் பொழிவு நிகழ்த்துவோன்;
இயற்கை யறிவின் இடையறு ஊக்கின்
செயற்கரிய செய்து சிறந்து விளங்குவோன்;
தன்பணி யறியுந் தமிழபி மானிகள்
நன்பொற் கிழிமுன் நல்கிடப் பெற்றோன்;
கல்வித் துறையிற் கைதேர்ந் தவர்க்கு
நல்கு நலத்தின் முன்னதாம் வரிசையென்
றியம்புறு கௌரவ இலக்கிய டாக்டராம்
நயப்பெறு மகுடம் நாலா ண்டுமுன்
எய்துதற் குரியன் இந்நாட்பெற் றுனெனுஞ்
செய்தி செவிபுகத் தென்மொழி நாடெலாம்
பெருமகிழ் எய்தப் பிறங்கும் பெருமையன்,
திரு. வே. சாமிநாதையனுஞ் சீரியன்
இன்னும் இம்மா நிலமிசை இசையொடு
தன்னவா நிறைவுறத் தழைத்து வாழியவே!

கே. ஜி. சேஷையர்.

ஸ்ரீ:

# மதிப்புரை.



கீதோதயம்:—இது, ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் பாலசேஷ்டிதங்களை விஷயமாகக்கொண்ட அருமைவாய்ந்த ஒரு இனிய தமிழ்நாடகம்; சென்னை கௌரவ ஸ்ரீமாந். வீ. வீ. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஸ்வாமியால் இயற்றப்பெற்றது.

கண்ணபிரானுடைய திருவிளையாடலைக் கற்றுங் கேட்டும் மனங் கரைந்துருகா மாந்தரும் உளரோ? அதனால், இந்நூல் படிப்பவர் யாவரையும் பரவசமாக்குமென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. இஃது ஒரு புறம் நிற்க.

கண்ணன் ஸ்ரீகீதையென்னும் அருள்நிறைந்த அமுதமொழிகளால் உலகத்தை வாழ்வித்து உயர்வறவுயர்ந்தவன். ஆயினும், அப்பெருந்தகையின் பிள்ளைப்பருவநிகழ்ச்சிகளெல்லாம் கள்ளமும் பொய்யும் காமமும் கலந்து அவன் பெருமையோடு முரண்படுவனவாகத் தோன்றுதல்பற்றி ஒருசில சரித்ராசோதகர்கள் பாகவத கிருஷ்ணன்வேறு, பாரத கிருஷ்ணன் வேறு என்று கூறி மயங்குவாராயினர்.

ஆயினும், அஃது உண்மைக்குமாறென்பது, அவ்வவதாரத்தின் இரகசியங்களை உணரவல்லார் நன்கறிவர். அங்ஙனமாகிய அவன் பாலலீலைகளின் உட்கருத்தைப் பலர்க்கும் தெளிவித்தலே இந்நாடகத்தின் நன்னோக்கமென்று தெரிகிறது.

இந்நூலினுள், கதாநாயகனுடைய குணமும், கூற்றும் செய்கையுமாகிய அனைத்தும் கீதையின் விளைவிற்கேற்ப முளையின்கண்ணே பொதிந்துகிடக்கின்றன. இவ்வுண்மையை நன்குநிறுவுதலானே இதற்குக் "கீதோதயம்" என்று பெயர் இடப்பெற்றது. மற்றுள்ள பாத்திரங்களின் சம்பாஷணைகளும் ஆழ்ந்தகருத்துடன் வேதப்பொருளை வெளியிடுகின்றன.

இங்ஙனம் வெளிப்படையும் குறிப்புமான இருவகைப் பொருளையும், பாத்திரங்களின் தகுதியோடும் உலகியல்போடும் மாறுகொள்ளாமல்

இணைத்துச்சொல்வது எளிதான காரியமன்று. ஆயினும், அதனை இந் நாடகத்தில் ஆசிரியர் கடைபோக நிறைவேற்றியிருப்பது மிகவும் வியக்கத்தக்கது.

இதன் ஒவ்வொரு காட்சியும், ஆக்கியோருடைய நூலறிவுடன் கூடின நுண்ணிய ஆராய்ச்சித்திறமையைப் புலப்படுத்துகின்றன. "பந்தமோக்ஷயோகம்" போன்ற இடங்களைப் பயில்வோர்க்கு மெய்ம் மயிர்சிலிர்ப்ப உவகைக்கண்ணீர் ஊற்றெடுத்தொழுகுதல் ஒருதலை.

ஆழ்வாருளிச்செயலின் அர்த்த விசேஷங்களை அடியொற்றின பகுதிகள் இதில் மிகுதியும் உள்ளன. இதன்கண் ஆங்காங்கு ஸ்வரூபோ பாயபுருஷார்த்தங்களை உள்ளுறைபாகவுய்த்துணரவைத்து நாடகநடையி லெழுதியிருப்பது ஒரு புதுமாதிரியே. இத்தகைய புதுமாதிரியான புத்தகங்கள் இன்பநுகர்ச்சிக்கும் அறிவுவளர்ச்சிக்கும் உரியன. இதனை யாக்கியோர் இன்னும் பல புத்தகங்களெழுதி வெளியிடுமாறு எம்பெரு மான் திருவருள்புரிய வேண்டுகின்றேன்.

---

முதலாவது இராஜராஜசோழன்:—இது, திருவையாற்று அரசர் கல்லூரித் தமிழாசிரியர் திரு. L. உலகநாதபிள்ளையவர்களால் எழுதப் பெற்றது. கி. பி. 983 முதல் 1013 வரை தமிழ்நாடாண்ட சோழ வேந்தனின் ஜீவிய சரிதத்தைக் கூறுவது.

பழைய கல்வெட்டும், அதனையாராய்வதிற் றேர்ந்த பரிசோதகர் அறிக்கைகளும், சில தமிழ்நூற்சான்றுகளும் இந்நூலை எழுதி முடித் தற்கு உறுதுணையாய் உதவியுள்ளன. அவற்றோடு இதன் ஆசிரியர் தம் நுண்ணறிவா னாராய்ந்துகண்ட அரிய முடிபுகள் பலவும் இதிற் காணப் படுவனவாம்.

இப்புத்தகத்தில் இராஜராஜனுடைய அரசியலமைப்பு, அவன் முத் தமிழ்வளர்த்த முறை, திருமுறைகண்டு தேவாலயமெடுப்பித்தது முத லிய வரலாறுகள் தெளிவாக உரைக்கப்படுகின்றன. இதுபோன்ற தமிழ்நாட்டின் சரிதநூல்கள் மிகப் பல்குதல்வேண்டுமென்பது அறிஞர்க் கெல்லாம் ஒப்பமுடிந்தது. இது கல்லூரி மாணவர்க்குப் பாடபுத்தக மாகப் பயிலுந்தரத்தது. விலை அணா 12. வேண்டுவோர் ஆசிரிய ரிடம் பெறலாம்.

---

738 பூத மைந்தனு ளொன்றுமற் றையவுமாம் புலமைப்
பேதம் வல்லதொன் றவ்வுழிப் பலவகைப் பிண்ட
நாத னோர்தையு ளனிவளா யமைத்திட வோரொன்
றுதன் மேயின தொன்றுமற் றையவுமா யமையும். (௩௬)

739 ஐந்து பூதமு மவ்வகைத் தாயதே யல்லா
மைந்து லாமவ ணிருவகைத் தாயவும் வரம்பில்
பந்த மெய்துமாற் காரண காரிய பான்மை
யெந்தை யார்தமக் குணர்வுதா முணர்வரி தெமக்கே. (௩௭)

740 நிலாய தெத்திறத் தாதியம் பரத்தினி னெடிதா
யுலாய பல்லுயிர்க் கணங்தொறு முலாயவ னுளத்துட்
குலாய வாணையின் பொருட்டதற் களவைமீர் குலாய
தலாத லத்தின்மேற் றுறக்கமா தியநிலை தாலே. (௩௮)

741 ஒருமை யான்றன தாணையா லவையுட னளாய
வருமை சான்றபே ருலகம தவணவெவ் வுயிருங்
கரும மாதியா வனுபவிப் பவையில்லாக் காட்சிப்
பெருமை வாய்ந்ததொன் றுருபமு மவனெனப் பிறங்கும். (௩௯)

742 காம்ப யின்றபொன் னுழியா னிலைகா ரணமா
யுரம்ப யின்றபல் கோடியண் டங்களி னுறுப்பா
மரம்பி லத்தின தாழ்ந்தகீ ழெல்லையு மதன்வான்
வரம்பி னெல்லையு மறைவரம் பறுத்தில மறையோய். (௪0)

743 புகல நின்றவிம் பரினுமும் மடங்கெனப் புடைபோந்
தகல மேயது தடிப்புமற் றதனுளா வரணம்
பகரி னேழுள வவற்றுள்வெள் ளிடையுறுப் பரப்பிற்
சகல தேவரும் வீற்றிருப் பார்களி தகவே. (௪௧)

744 பொன்னி னுலரு மணியினுல் விளங்குமேழ் புரிசை
மின்னு யிர்த்ததோ விரசைமா மணிகதிர் விரித்தோ
சொன்ன மால்வரை களிற்சுட ரண்பொதி தொடர்போ
வின்ன தென்றுணர் வரிதவண் சுடர்கிரி யியல்பே. (௪௨)

745 கொற்ற மேதகு குமுதனு தியரொரு நால்வர்
சொற்ற கீழ்த்திசை முதலவாய்க் காவன்முந் துறுவார்
பொற்பு லாஞ்சங்கு கருணனு தியாதன் புடையா
யுற்ற கோணமோர் நான்கினுங் காவன்முந் துறுவார். (சரு)

வேறு.

746 ஏழா வதன்க ணுறைபவர்தா மிருடி கணங்க ளிருமூன்றில்
வாழா தரவுற் றனவாயு மதியே திகளோர் கினுளுணர்விற்
ருழா மறைசா வித்திரிபுட் டரும மகநான் கினுளிழுக்கஞ்
சூழா வநந்த கணநிதியச் சுதஞ்சே னையர்கோன் சத்தியமே. ()

747 மூன்று வதன்க ணுறைபவர்தா முதனுஞ் மீன மதுமுதலாய்த்
தோன்று திபரா மொருபதின்மர் தொடர்புற் றுறைவோ ருபயதலத்
தான்று தாவுற் றுறைபவர்கே சவனு தியர்பன் னிருவரெனச்
சான்று மறைகற் றவருணர்த்துஞ் சால்பிற் றவற்றி னிடையிடையே.

வேறு.

748 சுத்தசாத் துவித குணத்தினு விறைவன்
சொருபரூ பத்தொடுந் தனதாஞ்
சித்தமே மணிமண் டபமென விரும்பத்
தியானம துறீஇக்குடி யிருத்தும்
பத்தருட் சிறந்த பத்திமை யினராய்ப்
பறைதவிர்ந் தனுபவ முதிர்ந்த
வுத்தம விருடி கணங்கணீப் பிலவா
யுறைவுழி [1]யுறைவர்யோ கித்தே. (சசு)

749 வாயுவ மதியு மெண்ணில்பல் கோடி
வச்சிரக் கடகவான் கரஞ்சே
ராயுத கணமுன் காவல்பூண் டனவா
யகவயிற் றுதிப்பதே யல்லா
லேயுமத் தானத் திதயமே கோயி
லெனமனத் துணர்ந்துபூ மடந்தை
நாயகா சரணு கதி[2]நமோ நாரா
யணசா ணுகதி யெனுமே. (சஎ)

---

[பி-ம்.] [1]யுறைவ, சா. [2]நமோ நாரா யணசா ணுகதி யெனுமே. சா.

750 உள்ளுறுத் துணர்தற் கரியவா மூானுற்
றுவவுநாண் மதியினைப் பழித்து
வெள்ளிவே தண்ட மெனவுரு பமைந்த
வேதமா மெண்ணிறந் தனதாம்
புள்ளின்மேற் கமல மகளொடு மணுவுட்
பொருப்பினு ளணுவுமாய்ப் பொருப்பாந்
தெள்ளியோ யகிலாண் டமுநின தகத்தாந்
திறமதிப் பரிதெனத் துதிக்கும். (சஅ)

751 தருமமா கியதொன் றெண்ணில்பே ருருவந்
தனக்கமைந் தனவுமாய்க் கமலத்
திருமகள் பிரியாக் கருணைவான் கடலைச்
சிற்குண திகப்பருப் பதத்தைப்
பெருமித முறவே சுகானுபூ தியினாற்
பேதம தறத்தியா னித்தே
சுருதிகற் றுளபற் பலபொரு ளுரையாற்
றுதித்திடா வணங்குநீ தியவே. (சகூ)

752 மறைகளா னவற்று ளீரிரண் டினையே
வாம்பில்வா னகத்திடும் கொற்றச்
சிறைகளாய்ப் படைத்த வயினதே யனெனுந்
தேசிகன் றேவிமா ருடனே
யிறைகொள்பே ரண்ட மிரண்டையு மகத்திட்
டெழுநினை யென[1]திணைப் புயத்தாற்
பொறைகொள்வா னிலது வாயமர யமதென்
புகலுவே னெனத்துதித் திடுமே. (ருo)

வேறு.

753 மகமெ னத்தரும் யாவையும் வரம்பில வடிவாகி
யிகமெ னத்தகு மிவணிகர் தேபா மெனும்வீட்டி
னகம டைந்துள முத்தரொ டிறைவனை யனுபூதிச்
சுகம டைந்தன வாமதிப் பதனெடுந் துதிசெய்யும். (ருக)

[பி-ம்.] [1]துணைப். சா.

வேறு.

754 நாவிக் கமலத் தினின்முதலே
நான்கு முகனைப் படைத்தவனாற்
பாவித் திடுமெக் கடவுளர்க்கும்
பல்லா யிரகோ டிகளாகு
மாவித் திரட்டுங் களைகணென
வமைந்தாய் நினையார் நிகரெனவே
சாவித் திரியா சனமாகிச்
சரணஞ் சரண கதியெனுமே. (௫௨)

வேறு.

755 ஆயிரம் பருவா யிசைந்துள வநந்த
னமைந்ததே வியரொடு மநந்தம்
வாயிசைந் ததன்மேல் வரம்பிலா வடிவா
மறைகடாம் பொருளுரை யெனவே
பாயிரப் படுத்தி விரித்துரைத் தவற்றைப்
பன்முறை பணித்தகி லாண்டந்
தாயின சரணம் புயவென தகத்தாந்
தயாபரா சரணெனத் துதிப்பான். (௫௩)

756 சத்திய நிதியச் சுதமிவை பரனைத்
தணந்துமே தணந்திடா தவராம்
வித்தகர் தமைப்போல் வேண்டுரு வமைதாய்
விண்ணவர் தொழும்பரா பரனே
முத்திசத் தியநீ ணிதியொடச் சுதமு
மூற்றுநீ யெமையெவன் குறித்த
தத்தனே சரண கதி[1]நமோ நாரா
யணசர ணாகதி யெனுமே. (௫௪)

வேறு.

757 தானை முதன்மைக் கடவுளர்தஞ்
சமுகத் துடன்முத் தரும்விரும்பிற்
சேனை முதன்மை முகிலெனத்தேன்
றுளிக்குங் கமல மலர்மகடன்

[பி-ம்.] [1]நமோ நாரா யணசர ணாகதி யெனுமே. சா.

கோனே முதன்மை யுடன்வளைப்பக்
குழைபொற் பிரம்பா னெருக்ககற்றுஞ்
சேனை முதல்வன் றேவியரிற்
சேய்த்தாய் சாணு கதியெனுமே. (ருரு)

758 செய்த்தா யிருந்தென் னணித்தாயென்
றிருமா மணிமண் டபத்திருப்பு
வாய்த்தான் றிருவோ லக்கம்வர
மலர்க்கண் ணிணைகாண் டருமகிலங்
காத்தா னஃதன் றியும்படர்ந்தும்
காட்சி தருமென் பது திடனு
லேத்தா தவரா ரவர்பெருமை
யேத்தும் படிக்கின் கெளிதொன்றே. (ருசு)

வேறு.

759 கனக மால்வரை பவளமால் வரைபுடை கவின
வனக மால்வரை நடுவுற லவனுளா ரறிவான்
சனக னன்மக ளுயிர்த்துணை யபனாரன் சார்வாய்ப்
பனக மாநிலத் துறைவதிப் படியெனும் படித்தே. (ருஎ)

760 காசில் காசினம் பாடெறிப் பவையலாற் கதிர்பெய்
மாசின் மாயையி னசும்புகள் விசும்பினின் றிழியுந்
தேசு லாமணிச் சிகரபந் தியினெடுஞ் சேணுற்
றூசி லாசைதோ றவிர்கன காசலத் தனவே. (ருஅ)

761 புழுகு மான்மதத் தொளியொடுங் கலர்துகை புனைவார்
மெழுகு பூண்முலைத் திருமக ளன்பர்மெய் முழுது
முழுகு மாறவ ரிடத்தினிற் பொழியருண் முதிர்ந்தே
யொழுகு மாறுபோன் றொழுகுமா றுகளுலப் பிலவே. (ருகூ)

762 காமர் மாசையந் தளிர்ததை பனைக்கையாற் கவின்பொற்
றும மாமணி மாளிகை தயங்குநித் திலக்காழ்
வாம மேகலை சுவணநுண் டுகினறு மலர்கூ
ரேம வாசிகை புரவுபூண் டிலகுகா வினமே, (சுo)

763 முத்த வாணகைத் திருமகண் மூலைமுகங் காங்கால்
சித்தி ரக்கனி வாய்விசித் திரத்திரு நயன
மொத்த தாமரை முகுளமேர் டுறுமல ருலவாப்
பைத்த பன்மலர் கஞலிய வாவிபற் பலவே. (சுக)

764 கண்ணு ளார்புலன் கணிப்பருங் கதிர்செய்மா மணியா
லெண்ணின் மாற்றுறு கொழும்பொனு லெண்ணிறந் தனவா
வண்ண மேதகு மாடமா ளிகைகண்மண் டபங்க
ளுண்ணி லாயவச் சுதம்பயில் வளத்தன வுாவோய். (சுஉ)

வேறு.

765 *பாத்துவ முதலாப் பஞ்சவுற் பனனும்
பரமனெம் மிறைவனு மெனல்போல்
[1]வாத்தொடு நிகழும் பஞ்சமா தொழிலும்
வழங்குவ தவன்றிறத் தெனல்போற்
றிாத்தவாம் பஞ்ச பூதமுஞ் சனித்த
செய்கையு [2]மவன்றிறத் தெனல்போற்
காத்தினிற் பஞ்சா யுதங்களே தரித்த
கருணையங் கடவுளா மெனல்போல். (சுஙு)

766 *ஞானமு மழகும் வீரமுந் திருவு
நவையிலா நந்தமு மெமவே
யானவே னையவா முலகமென் பவற்றிற்
கவையமை தியவல வெனல்போல்
வானுற நிவந்த வெழுநிலத் தமைந்த
மாடமா ளிகையின்யாப் புறுத்தைம்
பானிறந் தழீஇய துகிற்கொடி நுடங்கு
பாங்கரின் வயங்குமெம் மறுகும். (சுச)

767 *செம்மையின் யாணர் திவ்விய மணியாற்
செழும்பொன்னுற் றிசைதிசை யெறிக்கும்
பொம்மனு நிவப்பும் வியனுமீ ளிடையும்
[3]பொருவலி னெருமறு கிடைபுக்

---

[பி-ம்.] [1]வாத்தொடும புகழும் பஞ்சமாத் தொழிலும் வழங்கலு மிவன்றிறத் தெனல்போற். மா. [2]மிவன். மா. [3]பொருந்தலி னெ நமறு கிடைப்புக். மா.

கிம்மறு கெவனிங் கெவற்றுளிம் மாட
மெம்மணி மாடமென் றியாருந்
தம்வயிற் செறிந்தோ ரிமைப்பரு நாட்டர்
தாங்கியு மறிவருந் [1]தகைத்தே. (சுரு)

768 சோதியா லொருமை தோன்றலும் பன்மை
தோன்றலா மையிற்றொகை நிலசய
சாதிசால் புறுபல் சாரசா மவற்றுட்
டங்கிய வணுக்களே நிகரா
நீதியா னுணங்கு கேள்வியின் றுறைபோய்
நிச்சயித் திறைநிலை யுணர்ந்தோர்
பேதியா வுணர்விற் கோட்டமற் றெழுங்கின்
பீடுசார்ந் துளவமை தியவே, (சுசு)

வேறு.

769 முற்கு ணுதியர் புதுவதாய்ப் புதுவதாய் முழுதும்
பொற்பி னெய்தலிற் பூரண பொற்குடம் பூரித்
தற்பி னுண்ணிடை யார்மணி விளக்கமைத் தலர்தூஉய்க்
கற்க வாய்கமழ் சுண்ணம திறைப்பரெங் கணுமே. (சுஎ)

770 நித்த ராதியர் பொலந்துகில் களபநீ ணிலவார்
முத்த மாலிகை முழுமணி மாலிகை முருகார்
கொத்து நாண்மலர் மாலைபே ரணியெதிர் கொடுநின்
றய்த்து முத்தர்பொன் னடியில்வீழ் திறமொடி விலவே. (சுஅ)

771 முதியி னிற்கதிர் மல்கிய தெனமதிப் பனவாங்
கதிர்கொ ணித்திலக் கவிகைசா மரைகள்கைப் பற்றித்
ததியர் மெல்லடித் துணைக்குப சாரம தாகப்
புதிதி னிட்டமென் மலர்த்தவி சொடும்பொலிந் துளதே. (சுகூ)

772 மணியின் மாளையிற் சுடருநெட் டிலைக்குலை வாழை
யணிகொள் பாளைமென் கமுகொடு வாயிலி னமைத்தே
திணிதி ளேங்கிய காமர்தோ ரணந்தடந் தேர்க
டுணிவ ருந்தொகை பட[2]நடு வணதுவன் றுளவே. (எ0)

---

[பி-ம்,] [1]தகைய, மா. [2]நடு வணைத்துவன் றுளவே,

773 முற்றும் வால்வளைத் திரண்மணி முழாவணி முரசம்
பற்று பேரொலி பழுதில்யா ழிசையொடும் பயில
வுற்ற வானவர் நிகழ்த்துபல் லாண்டொலி யுறவோர்
கற்ற சாமவே தத்தொடுந் திசைதிசை கறங்கும். (எக)

வேறு.

774 இன்பமுந் திருவுந் தருமமும் புகழு
மியலுமின் னிசையுநா டகமு
நன்பொருட் டிறனு மீறிலா நந்த
ஞானமு மழகும்வீ ரியமு
மன்புமல் லருளுங் கருணையும் பிறந்த
தவணத னிடைப்பிற வாத
துன்பமா தியவா மறுதலை யெனவே
தொல்லைநான் மறைதுணிந் துணர்த்தும். (எஉ)

வேறு.

775 நித்தர் முத்தரென் றிருதிறத் தினரவ ணெடுமா
லொத்த காட்சிய ருவர்ப்பில்பே ரானந்த மொடியா
வித்த கத்தினர் வேண்டுருக் கொள்பவர் விளியாச்
சத்த மாதிய வொருபொறி யினுறுகர் தவத்தார். (எங)

776 தாக முண்டெனின் மோகமுண் டெனவுரை சதிரார்
யோக மன்றியே வியோகமென் பதுசிறி துறுதா
ராக மொன்றிளே டுயிரினே டுறைவதே யல்லா
லேக காலத்தி னனேகமா முடலுபி ரெடுப்பார். (எச)

777 வாச வான்பொழிற் சினைதொறுங் குயில்களாய் மயிலாய்த்
தேசு லாமணி வரைதொறு மோதிமத் திரளா
யாசை பூண்டுயர் வடிவெடுத் தாடல்பா டலொடுந்
தேச வாகதி கதியெனத் துதிசெழு தகையார். (எரு)

778 பறவை யின்றிரண் மைந்தர்மங் கையரெனப் பாவித்
துறவு பூண்டுமெய்த் துறவினின் றவர்தம துருவாய்
நறவு ளாயநல் மலர்சொரிந் திறைவனை நயந்தே
துறவு பூண்டருச் சனைசெயு மெவையுமத் தொடர்பே. (எசு)

779 புந்தி யுட்களி பொருந்திமங் கைபர்புமான் களுமா
யந்த மைந்தருந் தமது மங் கைபர்படி வமதாய்
மந்த ரம்பொரு வருமணி மாடவீ திதொறுஞ்
சந்த தங்குழீஇ யாடல்பா டலிற்களி தகையார். (எஎ)

780 இறைகொள் யாவரும் யாவையுந் தமதமக் கியைந்த
முறைகொள் வார்கள்வேண் டுருவமா யிடையென முதனூன்
மறைகொள் வாய்மையான் மபர்வொரு சிறிதுறு வகையா
லறையி லுத்தமச் சேதன ரென்பதா ரறிவார். (எஅ)

781 ஏம மால்வரைக் குலங்களு மேமமால் வரைபோற்
பாம மேயமா ளிகைகளு மவையகப் படுத்துஞ்
சேம மேயவா வரணமுந் திருமறு மார்ப
ஞமம் யாவையு மிறைகொளெவ் வுழியினு நவிலும். (எகூ)

782 காவி யாவையுங் கண்டுகேட் டுண்டுயிர்த் துரைக்கும்
வாவி யாவையு மவற்றினற் றுங்கவா வியினுட்
பூவி னங்களும் பூநிரை பொதுளிய புனலும்
யாவு மவ்வகைத் தசேதன முள்ளதெவ் வியல்பால். (அ0)

783 *செறியு மிற்றொறும் புனன்மலர் முதலிய சிறப்பிற்
குறிகொள் மந்திரத் தமைந்துள வுறுப்பினிற் கொடுபோழ்
தறிவி மூர்தவை [1]தலைதடு மாறினு மவையே
நெறிய வாயிறை யுட்கொள நிறைக்குநன் னீரார். (அக)

784 வேண்ட லொன்றைவேண் டாமையின் மையர்வியப் பனவா
மாண்ட வைம்புலன முரணிழந் தேவல்செய் வாத்தா
ராண்ட கைத்திரு நாரணன் குணங்கடா ரகமாய்ப்
பூண்ட புந்தியர் யாதுமோர் குறையுறாப் புனிதர். (அஉ)

785 கேட்ப தங்கவன் குணங்களே வாக்கினுற் கிளப்பான்
வேட்ப துந்திரு நாமமே விமலனா யகனுக்
காட்ப டுந்திற முடையர்யா சேறு[2]மாங் கவர்போற்
றூட்ப டுத்தபொன் முடியின ராயமே தகவார். (அங)

[மூ-ம்.] [1]முறைதடு மாறினு. மா. [2]மங் கவர்போற். சா.

786 போதி ஞானவித் தகத்தினுற் பொறிநெடுந் திகிரி
யேதி யாகியுங் களைகணு யெழில்புரி யநந்த
ஞதி யாகிய தமர்களா யலகிலே னையவரம்
பேதி வானவர் குணத்திறம் பாதுறை பெரியோர். (அச)

787 உருவி லாததிற் பேறெனப் பேரின்ப மொரீஇய
திருவி லாரெனும் பிறர்மத மிழுக்குறத் திரமாம்
பொருவின் மாமணி மண்டபத் தனந்தன்மேற் பொலிந்த
சொருப மாதவற் சென்றுகண் டின்புறுஞ் சுகத்தார். (அரு)

வேறு.

788 தன்னுலகந் தன்னருகென் றிபைந்ததல்லாற்
றன்னைப்போ லாய சால்பிற்
குன்னரிய திருமகளுங் கவுத்துவமு
மொழிந்துளவொப் புமையே யுள்ளார்
நன்னயஞ்சேர் நாயனடி மைத்திறமுந்
திறம்பாதே நட்பி னென்று
மின்னுயிர்கட் கின்னுயிரா மிறைவனிற்பே
ரானந்த மெய்து நீரார். (அசு)

789 முன்னுலகென் றமைதியவா மொருமூன்றில்
விழுமியவாய் முதன்மை பூண்ட
பொன்னுலகத் தயிராணி முதலவரோ
டிணைவிழைச்சுப் புரிதல் போற்றி
யின்னமிர்துண் யோர்தருநீ ழலில்விபுதர்
தொழக்களியிற் றிரனுர் வாழ்வு
மன்னவர்தம் பெருவாழ்விற் கருநாகாய்
விடுமென்று லறைவ தென்னே. (அஎ)

வேறு.

790 நித்த ராமவ ரன்றிமுத் தருணிலத் திருந்தாங்
குய்த்த வூழ்தொடர் தமானவன் றிருமுன முறுரா
யத்த னேடனு பவமிலார் தமையனு பவமாஞ்
சித்த ராய்ப்புறத் துறைவர்கே வலரெனச் சிலரே. (அஅ)

791 ஊழி னிற்பெரு வலியுடன் முறையுள வுளவேழ்
பாழி னைக்கழிந் ததனது ஞாங்காரய்ப் பாந்தே
சூழி ரும்புனல் விரசையக் கரையினுந் தொடர்ந்தே
வாழி முற்குணத் தழிவில்ஞா னநந்த மயமாம். (அகூ)

792 கருணை யந்திரு வுருவொடுஞ் சுடர்விரி கடவுட்
சொருப மானவன் சுகத்தினை யகத்திடாத் துயவுய்த்
திருப மொன்றுடன் றனித்தபுன் சுகத்துவீழ்த் துயிரின்
மருவி யேபுறத் தகத்துறு திருத்திய வகையால். (கூ0)

இரண்டுந் தொடர்.

793 சிந்தை யாற்றனை யனுபவித் தின்புறுச் சிறியோர்
புந்தி யானதைத் திரும்புவித் தருள்செயும் புனித
னந்த மார்க்கமோ டவரையவ் வுலகில்வைத் ததுதா
னெந்த மார்க்கமெப் பொருட்டென் வுணர்வரி தெமக்கே. ()

794 தன்னை யுற்றுரைத் திறைஞ்சிநற் றூர்புனைந் துயிர்கட்
கன்னை யாளொடும் வாழ்வகண் டுரைகள்கேட் பதற்கு
முன்னை நாட்டரு முறுப்பினை யவயவி முயறற்
கென்னை யாண்டவன் செய்ததே ததனொடொன் றிதுவே. (கூஉ)

795 பன்ம ணித்திர ளுரையொடும் பழகிய பாதர்
வின்ம ணித்திரள் பகர்வயிற் கொள்ளுநர் விரைந்தோர்
புன்ம ணிக்குறு பொருள்கொடுத் ததனைநன் பொருளா
மன்ம லர்க்கணி னேக்கிவீற் றிருப்பதே மானும். (கூங)

வேறு.

796 *ஆங்கதற் கணியா மாதியா வாண
மொன்றினுக் [1]கலகில்பே ரண்டம்
வாங்குபு கவவு புரிநெடுந் திகிரி
வரைகளோர் மருங்கினுக் காற்று
வோங்குபு பிறங்கு சிகரகோ புரங்க
ளொருவனீ ராயிரங் [2]காங்க
டாங்குபு துண்டிக் காண்டொறும் வரம்பு
தரித்திடற் கரியதன் மையவே. (கூச)

---

[பி-ம்.] [1]ளவில். [2]காங்கண், மா.

